# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்



பந்த பாசங்களிலிருந்து விடுபட வேண்டுமா?

Volume : 3 | Issue: 12 | February 2017 | Annual Subscription Rs. 100/-

மலர் 3 | இதழ்: 12 | பிப்ரவரி 2017 | வருடச் சந்தா ரூ. 100/-



weblink




Sri Bagavath Mission





*பந்த பாசமுள்ள குடும்பமாக வாழ்வது ஒன்றுதான் குடும்பத்துக்கான இலக்கணம். அதில் எந்தத் தவறும் கிடையாது. பந்த பாசமில்லாமல் வாழ்வதுதான் தவறானது. குடும்பம் என்ற எல்லையானது சமுதாயம் என்ற அமைப்புக்குக் கட்டுப்பட்டது. குடும்பத்தின் எல்லைக்குள் பந்த பாசம் என்பது அழகானது; அவசியமானது.*

– ஸ்ரீ பகவத்



கோடையில் இயற்கை சூழல் மிகுந்த

## ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : **House of Peace (Glass House)** அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : **28-04-2017** வெள்ளி மாலை **3:00** மணி முதல்
**01-05-2017** திங்கள் மாலை **3:00** மணி வரை

தலைப்புகள்

**1. ஞானப் புரிதல் 2. அகம் – புறம் 3. நான் யார்? 4. நினைவும் சிந்தித்தலும் 5. மனோலயம் – மனோ நாசம் 6. கர்ம வினை 7. தெளிவில் உறுதி**

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 3500/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் ஏப்ரல் 10-ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

முன்பதிவு செய்யும் வழிகள்:

1) **M.O, D.D. (or) Cheque :** வரைவோலை (D.D.) அனுப்புபவர்கள் : **A/c. Sri Bagavath Mission** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

2) **Direct payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : **Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 001590** என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

3) **Online Payment : Credit Card or Debit Card** மூலம் **www.pravaagam.org** என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன்
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 3.கைப்பேசி : 9994205880, 9789165555.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?

For More Details





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu, INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By: **PRAKASH PRINTERS, Salem.**
Mobile : 9843786655




# பந்த பாசங்களிலிருந்து விடுபட வேண்டுமா?

– ஸ்ரீ பகவத்

“எனக்கு ஆன்மிகத்தில் உயர்ந்த நிலையை அடையவேண்டும் என்ற விருப்பம் உள்ளது. ஆனால் அதற்கு எனது பந்த பாசங்கள் தடையாக உள்ளன. அவற்றில் சிக்கிக் கொண்டு நான் மிகவும் அவதிப்படுகிறேன். என்னுடைய பந்த பாசங்களிலிருந்து நான் எவ்வாறு விடுபடுவது?”

– இப்படி அன்பர் ஒருவர் கேள்வியை எழுப்பினார்.

ஆன்மிக உலகில் இப்படி ஒரு கேள்வி காலங்காலமாக வலம் வந்து கொண்டிருக்கிறது.

சில மடாலயங்களில் உள்ள சாதுக்களை குடும்பஸ்தர்கள் சந்திப்பார்களேயானால்

அவர்களை அந்த சாதுக்கள் ஒரு புழுவைப் பார்ப்பதைப் போல்தான் பார்ப்பார்கள்.

“இப்போது இராமாயணம், மகாபாரதம் போன்ற நூல்களைப் படித்து வா. கோயிலுக்குச் சென்று வா. அறுபது வயதுக்கு மேலாவது குடும்பத்தை விட்டுப் பிரிந்து விடு. அப்போதுதான் ஆன்மிகத்தில் உண்மையாகப் பாடுபட முடியும்.”

–இப்படி அவர்கள் கூறி விடுவார்கள்.

ஒரு பணக்கார பண்ணையார் ஒரு ஞானியிடம் வந்து கேட்டார்.

“சுவாமி, நான் சுவர்க்கலோகம் போவதற்கு என்ன செய்ய வேண்டும்?”

ஞானி அதற்கான நெறிமுறைகளைக் கூறினார்:

“நீ மனைவி மக்களை விட்டுவிட்டு வந்து விடவேண்டும். உன்னிடம் இருக்கும் செல்வத்தையெல்லாம் ஏழைகளுக்கு தான தர்மம் செய்து விட வேண்டும். அப்படிச் செய்வாயேயானால் சுவர்க்கத்திற்கு நீ மிகவும் எளிதாகப் போய்விடலாம்.”

சரி சுவாமி என்று கூறிச் சென்ற பண்ணையார் போயே போய் விட்டார்.

அந்த ஞானி தனது மற்றைய சீடர்களுக்கு உபதேசித்தார். “ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலுங்கூட பணக்காரன் பரலோக ராஜ்ஜியத்தில் நுழைந்து விட முடியாது.”

நாரதருடைய கதையைக் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

“ஸ்வாமி! ஆன்மிக முன்னேற்றத்துக்கு மாயை தடையாக இருக்கிறது என்று கூறுகிறார்களே அந்த மாயை என்பது என்ன?”

அதற்கு கிருஷ்ணர், “மாயையைப் பற்றி உனக்கு விளக்கமாகக் கூறுகிறேன் நாரதா. எனக்கு இப்போது சற்றுத் தாகமாக இருக்கிறது. எங்காவது சென்று கொஞ்சம் தண்ணீர் வாங்கி வா,” என்று கூறினார்.

நாரதரும் பக்கத்து ஊருக்குச் சென்று ஒரு வீட்டின் முன்னால் நின்று தண்ணீர் கேட்டார். அழகானதொரு இளம் பெண் கதவைத் திறந்து வெளியே வந்தாள். அவள் நாரதரை வீட்டினுள் அழைத்து உபசரித்தாள்.

அவளுடைய அழகில் மயங்கிய நாரதர் அவளையே திருமணம் செய்து கொண்டு அங்கேயே குடும்பம் நடத்தினார். அவர்களுக்குக் குழந்தையொன்று பிறந்தது. குழந்தைக்கு ஐந்து வயதாகும் போது அந்த ஊரில் மழை இல்லாமல் பஞ்சம் ஏற்பட்டது.

அவர் தனது குடும்பத்துடன் பிழைப்பைத்தேடி பக்கத்து ஊருக்குப் பயணமானார். அவர்கள் ஒரு பாலைவனத்தைக் கடந்து செல்ல வேண்டியது ஏற்பட்டது. அனைவருக்கும் தாகம். குழந்தை தாகத்தினால் மயங்கி விழுந்தது.

நாரதர் கிருஷ்ணரிடம் பிரார்த்தனை செய்தார். “கிருஷ்ணா! எங்களுக்குக் கொஞ்சம் தண்ணீர் வழங்க மாட்டாயா?”

கிருஷ்ணர் பதிலுக்குக் கேட்டார். “நான் என்னுடைய தாகத்துக்குக் கேட்டனுப்பிய தண்ணீர் என்ன ஆயிற்று நாரதா?”

நாரதர் தன்னுணர்வுக்குத் திரும்பினார். பந்த

பாசம் என்றால் என்னவென்று புரிந்து கொண்டார். மாயை என்றால் என்னவென்று புரிந்து கொண்டார்.

– இப்படி ஆன்மிக உலகில் அடுக்கடுக்கான பல சம்பவங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

பந்த பாசம் என்றால் என்ன? ஏன் அது ஒரு தடையாக ஆன்மிக உலகில் பேசப்படுகிறது?

ஆன்மிக உலகில் நாம் என்ன செய்ய வேண்டியது உள்ளது?

நாம் எதைச் செய்வதற்கு இந்த பந்த பாசம் தடையாக உள்ளது?

வேடிக்கைத் துணுக்கொன்றைப் படித்திருப்பீர்கள்.

ஒருவன் வெகுநேரமாக மின்கம்பம் ஒன்றில் காதை வைத்து எதையோ கேட்க முயன்று கொண்டிருந்தான்.

அவன் எதைக் கேட்க முயல்கிறான் என்பது எவருக்கும் புரியவில்லை.

அப்படி அவன் எதைத்தான் கேட்க முயல்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பிய இன்னுமொருவன் தானும் அந்த மின்கம்பத்தில் காதுகளைப் பதித்து உற்றுக் கவனித்துப் பார்த்தான்.

எதுவுமே கேட்கவில்லை. அதனால் அவன் வியப்புடன் கேட்டான்.

“எதுவுமே எனக்குக் கேட்கவில்லையே, நீ மட்டும் தொடர்ந்து எதைத்தான் கேட்கிறாய்?”

அதற்கு முதலாமவன் பதில் கொடுத்தான்.

“இரண்டு நாட்களாகவே கேட்டுப் பார்த்த எனக்கே எதுவும் கேட்கவில்லை. இப்போது மட்டும் காது வைத்துக் கேட்ட உனக்கு மட்டும் எப்படிக் கேட்கும்?”

எதையும் அடைய வேண்டியதில்லை என்பதை அறிந்து கொள்வதுதான் ஆன்மிகத்தின் உயர்வான நிலை.

ஏதாவது ஓர் ஊருக்குப் பயணம் செய்ய வேண்டுமானால் நாம் பயணத்துக்கான டிக்கெட்டை வாங்க வேண்டும். பெட்டி படுக்கைகளைக் கட்டி வைக்க வேண்டும்.

ஆனால் எந்த ஊருக்கும் செல்லத் தேவையில்லையென்றால், நாம் என்ன ஏற்பாடுகளைத்தான் செய்ய வேண்டும்?

எதுவும் செய்யத் தேவையில்லை.

எதுவும் செய்யத் தேவையில்லை என்பதை மட்டுமே புரிந்து கொள்ள வேண்டியதுள்ளது.

இதனால் தான் நாம் நமது வாழ்வை, அகம்–புறம் எனப் பிரித்துக் கொண்டுள்ளோம்.

அகத்தைப் பொறுத்த வரையிலும் நாம் செய்வதற்கு எதுவும் கிடையாது. அதை நாம் புரிந்து கொண்டால் மட்டும் போதும்.

நாம் எதுவுமே செய்யாதிருப்பது தான் உயர்நிலை ஆன்மிகம். அதுதான் உண்மையான ஆன்மிகமே.

ஆனால் ஆன்மிகம் என்ற பெயரில் எத்தனையோ செயல்பாடுகள் உள்ளன.

கோவில்கள், வழிபாடுகள் எத்தனையோ விதமான தியானப் பயிற்சிகள் என பல உள்ளன.

நாம் எதனையும் செய்யத் தேவை இல்லை என்பதைப் புரிந்து கொள்ளவே நமக்கு இத்தனையும் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆன்மிகம் என்பது முழுக்க முழுக்க அகம் சார்ந்த ஒன்று.

நம் மனம் சார்ந்த ஒன்று.

அங்கு நாம் நாமாக எதையும் செய்யத் தேவையில்லை என்பதைப் புரிந்து கொண்ட நிலையில் –

ஆன்மிகமே முடிவுக்கு வந்து விடுகிறது.

நம்முடைய மனம் இயற்கையாகவும், இயல்பாகவும் இயங்குவது தான் உண்மையான ஆன்மிகம்.

ஆரம்பகால ஆன்மிக அணுகுமுறைகள் அனைத்தும் பலவிதமான செயல் திட்டங்களைக் கொடுத்து விடுகின்றன.

அப்படிக் கொடுக்கப்படும் செயல் திட்டங்களில் ஒன்றுதான். ஆன்மிக வாழ்வுக்காக உலகியல் வாழ்வைத் துறந்து சந்நியாசம் எடுத்துக் கொள்வதாகும்.

இதனால் தான் எல்லா மதங்களிலும் துறவறம் போற்றப்படுகிறது. துறவிகள் போற்றப்படுகின்றனர்.

துறவறம் மேற்கொண்ட துறவிகள் என்ன செய்யப் பாடுபடுகிறார்கள்?

எதையுமே செய்ய வேண்டாத இடத்தில் எதையோ செய்திட முயல்பவர்கள் தாம் துறவிகள்.

அவர்களை உயர்வாகக் கருதுபவர்கள் தாம், இல்லறத்தில் உள்ளவர்களைத் தாழ்வாகக் கருதுகிறார்கள்.

ஞானமடைதலும், முக்தியடைதலும் எட்டாக் கனியாகக் கருதிக் கொண்டிருக்கும் காலம் வரையிலும் –

இத்தகைய முயற்சிகளை வாழ்நாள் முழுவதுமே மேற்கொண்டதில் தவறில்லை.

ஆனால் அத்தகைய ஆன்மிகம் இப்போது நமது காலடியில் வந்துவிட்டது.

ஞானம், முக்தி என்பதும் ஆன்மிகம் என்பதும் நமது வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் அடைய வேண்டிய ஒன்று அல்ல.

அது ஒரு வாழ்வியல் முறை. ஞானத்தையும் முக்தியையும் நமது அன்றாட வாழ்விலிருந்து பிரிக்க முடியாது.

குருடாக இருந்த ஒருவர் பார்வை பெற்று விடுவாரே ஆனால் அவருடைய வாழ்வின் ஒவ்வொரு அசைவையுமே தனது பார்வையுடன் இணைத்துக் கொள்கிறார்.

ஞானமும், முக்தியுமடைந்த ஒருவர் அனைத்தையும் தன்னோடு இணைத்துக் கொள்கிறார்.

அவர் துறவறம் மேற்கொண்டு உலக

வாழ்விலிருந்து ஒதுங்கிச் செல்லத் தேவையில்லை.

அகத்தில் எதனையும் அடையத் தேவையில்லை என்ற எளிமையான புரிதலே ஞானம்.

அந்தப் புரிதலின் விளைவாக நம் மன இயக்கம் எந்த நிர்பந்தமும் இல்லாமல் இயல்பாகவும் இயற்கையாகவும் இயங்குவது தான் முக்தி – விடுதலை.

மன இயக்கத்தைப் பற்றிப் பிடித்தால் பந்தம்

மன இயக்கத்தை இயல்பாக விட்டு விட்டால் விடுதலை.

அகத்தளவில் நாம் எதனையுமே அடையாத நிலையில்

நமது புறச் செயல்கள் மட்டுமே எஞ்சியுள்ளன.

புறச்செயல்களை நாம் எவ்வாறு செய்வது?

புறச்செயல்களைச் செய்வதற்கு துறவறம் தேவையா?

துறவறம் என்பது நம்மைத் தனிமைப்படுத்துவது.

– எல்லாப் பொறுப்புகளையும் விட்டு விடுவது.

புறச்செயல்களைச் செய்திட பொறுப்பு தேவைப்படுகிறது. பொறுப்பேற்றுச் செய்தால் மட்டுமே புறச் செயல்கள் வெற்றி பெறும்.

நீங்கள் கல்லூரி விடுதியில் தங்கிப் படிப்பதாக வைத்துக் கொள்வோம்.

உங்கள் தாயார் உங்களுடைய வீட்டில் ஜலதோஷம், காய்ச்சல் என்று ஓய்வாகப் படுத்திருக்கிறார்.

அந்நிலையில் நீங்கள் விடுமுறைக்காக வீட்டுக்கு வருகிறீர்கள்.

உங்கள் தாயார் என்ன செய்வார்?

இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்துக் கொள்வாரா?

உங்களைக் கண்டதும் அவருக்குக் காய்ச்சலும் ஜலதோசமும் ஓடி மறைந்து விடும். உற்சாகமாக எழுந்து உங்களுக்கு வேண்டிய உணவுகளை விதம் விதமாகச் செய்து வைத்து விடுவார்.

உங்கள் வீட்டிலுள்ள வேறுவிதமான சூழ்நிலையைப் பார்ப்போம்.

உங்கள் தாயார் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறார். வீட்டில் அவருடன் வசித்து வரும் நீங்களும் உங்கள் சகோதரரும் கல்லூரி சுற்றுலா சென்று விடுகிறீர்கள், உங்கள் தகப்பனார் தொழில் சம்பந்தமான பயணமாக வெளியூர் சென்று விடுகிறார்.

இரண்டு நாட்களுக்கு உங்கள் தாயார் மட்டும்தான் வீட்டில் தனிமையாக இருந்தாக வேண்டும்.

அவர் நல்ல உடல் ஆரோக்கியத்துடன் தான் இருக்கிறார்.

இப்போது அவர் என்ன சமைப்பார்?

தனக்கு வேண்டியவைகளை ஓடி ஆடிச் சமைப்பாரா?

அவர் எதையுமே சமைக்காமல் சமையலையே நிறுத்தி விடுவார். பிரிஜ்ஜில் உள்ளதைச் சாப்பிட்டு விட்டு டி.வி. முன்னால் உட்கார்ந்து விடுவார் அல்லது யாரையாவது போனில் கூப்பிட்டு வம்பளப்பார்.

ஏன் அவர் அவ்வாறு நடந்து கொள்கிறார்?

பொறுப்புக்களை ஏற்கும் போது தான் எவருமே செயல்படுவர்.

புற உலகம் என்பது பொறுப்புகளால் ஆக்கப்பட்டது.

அங்கு நீங்கள் தனிமனிதனாகவோ, துறவியாகவோ இருந்தால் பொறுப்புகள் அனைத்தும் முக்கிய மற்றவையாகிவிடும்.

ஒவ்வொருவருக்கும் கணவன், மனைவி, குழந்தைகளாக ஒரு குடும்பமாக வாழ்வது தான் பொறுப்புள்ள புற உலகத்தை உருவாக்கும்.

குடும்பத்திலுள்ள அனைவரும் பந்த பாசத்துடன் வாழ்வது இயற்கையானது; அழகானது; அவசியமானது.

குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் துறவிகளைப் போல் வாழ்வார்களேயானால் அது குடும்பமாக இருக்குமா?

பந்த பாசமுள்ள குடும்பமாக வாழ்வது ஒன்றுதான் குடும்பத்துக்கான இலக்கணம்.

அதில் எந்தத் தவறும் கிடையாது. பந்த பாசமில்லாமல் வாழ்வதுதான் தவறானது.

எல்லோரையும் ஒன்று போல நேசிக்க வேண்டும் என்ற கருத்து நடைமுறைக்கு ஒவ்வாதது.

கணவன் – மனைவி – குழந்தை ஒருவரை ஒருவர் நேசிப்பது என்பதும், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பது என்பதும் இயற்கையானது – அழகானது.

பந்த பாசம் என்பது இயற்கையானது.

அதில் எந்தத் தவறும் கிடையாது.

ஒருவர் நீதிபதியாக வேலை பார்ப்பதாக வைத்துக் கொள்வோம். அவர் தனது மகனைப் பொறுத்த வரையிலும் பாசமுள்ள தந்தையாகவே இருப்பார்.

ஆனால் அந்த மகனை ஒரு வழக்கில் குற்றவாளியாகக் கைது செய்து அவர் முன்னால் நிறுத்துவார்களேயானால் அவர் எவ்வாறு நடந்து கொள்வார்?

“இவன் எனது பாசத்துக்குரிய மகனாக இருப்பதால் இவன் மீதுள்ள வழக்கைத் தள்ளுபடி செய்கிறேன்,” எனத் தீர்ப்பு வழங்குவாரா?

குடும்பம் என்ற எல்லையானது சமுதாயம் என்ற அமைப்புக்குக் கட்டுப்பட்டது.

குடும்பத்தின் எல்லைக்குள் பந்த பாசம் என்பது அழகானது; அவசியமானது.







V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

# கேள்வி? பதில்...

## தகுதிக்கு மீறிய வேலையை எதிர்கொள்வது எப்படி?

**கேள்வி** : நான் ஒரு Windmill-ல் மின் உற்பத்தி செய்யும் நிறுவனத்தில் மேனேஜராக பணிபுரிகிறேன். நான் மாதத்திற்கு 120 மெகாவாட் மின்உற்பத்தி செய்து கொடுக்கும் பொறுப்பில் இருக்கிறேன். நான் சிறப்பாகச் செயல்பட்டதற்காக நிர்வாகம் என்னைப் போன்ற 10 மேனேஜர்களை நிர்வாகம் செய்யும் உயர்பதவியை அளித்து 120 மெகாவாட் உற்பத்தியில் இருந்து 1200 மெகாவாட் உற்பத்தி செய்யும் பொறுப்பில் அமர்த்தியது. எனக்கு கொடுக்கப்பட்ட இந்த பொறுப்பு என்னுடைய தகுதிக்கு மீறிய ஒரு வேலையாக இருக்கிறது. உயர் அதிகாரிகள் கேட்கும் கேள்விகள் ஒப்பந்தங்கள் போன்றவற்றிக்கு என்னால் சரியாகப் பதில் சொல்ல முடியாமல் மிகவும் வருத்தப்படுகிறேன். வேலைப் பளு மிகவும் அதிகமாக இருக்கிறது. புதிய இடம், புதிய சூழ்நிலை, குடும்பத்தை விட்டு தனிமை, புதிய உணவு என எல்லாம் சேர்ந்து தூக்கம் முற்றிலும் இல்லாமல் போய்விட்டது. உடல் எடை 7 கிலோ குறைந்து விட்டது. சரியாகச் சாப்பிட முடியாமல், வெளித்தொடர்பே கொஞ்சமும் இல்லாமல், யாருடனும் சரியாகப் பேச முடியாமல் எப்போதும் வேலை, வேலை என்று மனம் ஓடிக்கொண்டே இருக்கிறது. இதனால் இரவு 2 மணி, 3 மணிக்கு எல்லாம் தூங்காமல் அடுத்த நாள் உயர்அதிகாரிகளுக்கு தெரிவிக்க வேண்யடித் தகவல்களை எல்லாம் மெயில் அனுப்பிக் கொண்டு இருக்கிறேன். வேலையை விட்டு விடலாம் என்று தோன்றுகிறது. ஆனால் பிள்ளைகளின் எதிர்காலத்தை எண்ணி பயமாக இருக்கிறது. மிகவும் ஓர் கஷ்டமான சூழ்நிலையில் இருக்கிறேன். இதனால் எனக்கு நானே பேசிக் கொண்டும், புலம்பிக் கொண்டும் இருக்கிறேன். என்ன செய்வது என்று தெரியவில்லை. இதிலிருந்து எப்படி மீள்வது?

**பதில்** : உங்களுடைய புதிய வேலையை எப்படிக் கையாள வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட்டால் இந்தச் சூழ்நிலையை எதிர்கொள்ள முடியும்.

நண்பர் 120 மெகாவாட் மின்உற்பத்தி செய்வதில் சிறப்பாகச் செயல்பட்டதால் தான் அவருக்கு 10 மேனேஜர்களை நிர்வாகம் செய்யும் உயர்பதவியை அளித்து, 1200 மெகாவாட் மின்உற்பத்தி செய்யும் பொறுப்பையும் நிர்வாகம் கொடுத்துள்ளது. நண்பர் இதுவரை இருந்த சூழ்நிலை வேறு, இப்போது இந்தப் புதிய சூழ்நிலையை எதிர்க்கொள்வது முற்றிலும் வேறு. உயர்அதிகாரிகள் கேட்கும் கேள்விகள் மற்ற விபரங்கள் என அனைத்தையும் 10 மேனேஜரிடம் இருந்த தகவல்களை கேட்டு சேகரித்து ஒருங்கிணைத்து அனுப்புவதில் நண்பருக்கு அனுபவம் இல்லை. இதனால் உயர் அதிகாரிகள் கொடுக்கும் நெருக்கடியைத் தாங்க முடியவில்லை.

அவருக்குப் புதிய பொறுப்புக்காக வெளிமாநிலம், புதிய மொழி, புதிய இடம், புதிய உணவு குடும்பத்தை விட்டுத் தனியாக இருப்பது, வெளித் தொடர்பு இல்லாமல் இருப்பது என எல்லாம் ஒன்று சேர்ந்து தன்னுடைய தகுதிக்கு மீறிய வேலையை நிர்வாகம் தனக்குக் கொடுத்து விட்டதாக எண்ணிக் கொள்வது, இந்தப் பெரிய பொறுப்புக்குத் தகுதி தன்னிடம் இல்லை என்று எண்ணுவது, வேலையைக் கையாள தெரியாமையினால் ஏற்படும் பய உணர்வு, வேலைப்பளு அதிகமாக இருப்பதாக எண்ணுவது என இந்தப் புதிய சூழ்நிலை முற்றிலும் பொருத்தமில்லாமல் இருப்பதாகத் தோன்றுகிறது.

நாம் சந்திக்கும் பிரச்சினைகளுக்கு நம்மையும் பிரச்சினையையும் முதலில் பிரிந்து புரிந்து கொள்ள வேண்டும். பிறகு அந்தப் பிரச்சினைக்கு தீர்வு பெறுவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை புரிந்து கொண்டு செயல்பட வேண்டும்.

எந்த ஒரு பிரச்சினையையும் நாம் இரு வகையில் சந்திக்க வேண்டியுள்ளது. ஒன்று மனதை கொண்டு மனதில் தோன்றும் பிரச்சினைகளை நிர்வாகம் செய்யும் மனம் (Psychological Mind) மற்றொன்று புற விசயங்களை செயல்படுத்துதற்காக செயல்படும் மனம் (Physiological Mind) என்ற இரண்டு பகுதிகளில் நாம் எவ்வாறு செயல்படுகிறோம் என்பதைப் பிரித்து புரிந்து கொள்ள வேண்டும். இப்படி நாம் பிரித்துப் புரிந்து கொண்டால் எந்த இடத்தில் செயல்பட வேண்டும். எந்த இடத்தில் செயல்படத் தேவையில்லை என்று புரிய வரும். செயல்படத்

தேவையற்ற இடத்தில் செயல்படும் போது பிரச்சினைகள் குறைவதற்குப் பதிலாக அதிகரிக்கிறது. இதனால் செயல்பட வேண்டிய இடத்தில் செயல்படும் சக்தியையும், தகுதியையும் இழந்து விடுகிறோம்.

நண்பர் சந்திக்கும் பிரச்சினையை மனதின் இரண்டு பகுதிகளிலும் எப்படிப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதை பார்ப்போம்.

உயர் அதிகாரிகளின் நெருக்கடியான பேச்சு, தன்னுடைய தகுதிக்கு மீறிய வேலை கொடுத்தாக எண்ணுவது, புதிய இடம், உணவு, தங்குமிடம், குடும்பத்தை விட்டுத் தனியாக இருப்பது, நாளைக்கு தெரிவிக்க வேண்டிய தகவலை இன்று இரவே 2 மணிக்கு மெயில் அனுப்புவது, வேலையைப் பற்றிய பயம் போன்றவைகள் மனதில் வெளிப்படும் போது பொருத்தமில்லாத எண்ணமும் உணர்வும் வெளிப்படுகிறது. மேற்கூறியவைகளை மனதில் வரவே கூடாது என்று மனதிற்கு எதிராகச் செயல்படுவது தான் மனோரீதியாக செயல்படும் மனதைக் குறிக்கிறது.

நாம் இங்கு மனோரீதியாக செயல்படும் மனதிற்கு எந்தத் தீர்வும் கொடுக்கப் போவதில்லை. மனதில் எல்லாமே தாமாகத் தோன்றி தாமாக மறையும். மனம் தன்னைக் காத்துக் கொள்வதற்காக அதிகப்படியான எண்ணத்தையும், உணர்வையும் வெளிபடுத்தி மனம் சமநிலையை அடைகிறது. இப்படிச் செயல்படும் மனம் தான் ஆரோக்கியமான சுதந்திரமான மனம் ஆகும்.

நமக்கு ஏற்படும் எதிர்மறை எண்ணத்தையும், உணர்வுவையும் நாம் புறத்தில் நம்மை காத்துக் கொள்ள, சரியாகச் செயல்படுவதற்குத் தூண்டுகோலாக எடுத்துக் கொண்டு செயல்பட வேண்டும்.

ஆனால் மனதின் சுதந்திரமான செயல்பாடு புரியாமல், நாம் என்ன செய்து விடுகிறோம்? மனதில் நமக்கு ஒரு நிறைவான நிலை வேண்டும் என்று மனதிற்கு எதிராகச் செயல்பட்டு விடுகிறோம். அதனால் எதிர்மறை எண்ணமும் உணர்வும் மேலும் அதிகமாக வெளிப்படுகிறது. நாம் தொடர்ந்து மனதிற்கு எதிராக செயல்படுவதால் நம்மால் தாங்கிக் கொள்ள முடியாத மன வேதனையும், தூக்கமின்மையும், புலம்புதலும் ஏற்படுகிறது.

மனதில் ஏற்படும் பொருத்தமில்லா உணர்வு, எண்ணங்களை எப்படிப் புறகாரியங்களுக்குத் தூண்டுகோலாக எடுத்து செயல்படுவது என்பதைப் பார்ப்போம். அன்பர் தான் ஒரு மேனேஜராக இருந்து தனக்குக் கீழே வேலை பார்ப்பவர்களுடன் ஒரு நல்ல அணுகுமுறையும், ஒருங்கிணைப்பும் இருந்த போது அவர்களிடம் எப்படி வேலையைச் சிறப்பாக வாங்க வேண்டுமோ அப்படி வாங்கி 120 மெகாவாட் மின் உற்பத்தி செய்திருக்கிறார். அன்பர் இப்படிச் சிறப்பாக செயல்பட்டதால் தான் நிர்வாகம் உயர் பதவியை வழங்கி இருக்கிறது.

அன்பர் இப்போது உயர்அதிகாரி நிலைக்கு வந்த பிறகு, தான் எப்படி மேனேஜராக இருந்த போது தனக்குக் கீழே வேலை பார்ப்பவர்களிடம் சிறப்பாக வேலை வாங்கி 120 மெகாவாட் மின் உற்பத்தி செய்தாரோ அதே வழிமுறையைப் பின்பற்றி 10 மேனேஜர்களையும் சிறப்பாக ஒருங்கிணைத்து, அரவணைத்து 1200 மெகாவாட் மின்உற்பத்திக்கு கொண்டு வரவேண்டும். 10 மேனேஜர்களையும் சிறப்பாகக் கையாளும் கலையை கற்றுக் கொள்ள வேண்டும்.

அன்பர் ஒரு மேனேஜராக இருந்தமையால், 120 மெகாவாட் மின்உற்பத்திக்குத் தொழிலாளிகளிடம் என்ன என்ன விசயங்களை எப்படிச் செய்ய வேண்டும் என்பது நன்றாகத் தெரியும். அன்பர் தனக்குக் கீழே பணிபுரியும் ஒவ்வொரு மேனேஜரையும் கலந்து ஆய்வு செய்து எதனால் 120 மெகாவாட் உற்பத்தி செய்ய முடியவில்லை, அதற்கு என்ன காரணம், அதை எப்படி நிவர்த்தி செய்வது என்பதற்குத் தன்னுடைய சொந்த அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டு அவர்கள் ஒவ்வொருவரையும் 120 மெகாவாட் உற்பத்தி செய்யும் நிலைக்கு உயர்த்த வேண்டும். அன்பர் தினமும் 10 மேனேஜர்களையும் ஒருங்கிணைத்து கலந்து பேசி அவர்களுக்குச் சரியான அணுகுமுறையை தெரிவித்து தொடர்ந்து செயல்படும் போது சில மாதங்களில் 1200 மெகாவாட் மின் உற்பத்தி நிச்சயம் செய்ய முடியும்.

ஒரு சில மேனேஜர்கள் மின் உற்பத்தி சற்று குறைந்தாலும் அன்பரின் அணுகுமுறையால் அதை 120 மெகா வாட் வரை எட்டுவதற்கு என்ன என்ன சிறப்பான வழிமுறைகள் உண்டோ அத்தனையையும் அந்த மேனேஜர்களுக்குச் சொல்லிக் கொடுத்து உயர்த்த வேண்டும். அன்பரும் வேலையில் தன்னுடைய தகுதியை உயர்த்திக் கொண்டு தனக்கு மேலே இருக்கும் நிர்வாகம் தன்னிடம் என்ன எதிர்பார்க்கிறது என்பதைப் புரிந்து கொண்டு அதை நிறைவாகச் செய்யத் தொடங்கினால் போதும். அன்பர் இந்தப் பதவியிலிருந்து அடுத்த உயர்பதவிக்குச் செல்லும் நிலைக்கு உயர்ந்து விடுவார்.

நாம் எவ்வளவு உயர்பதவிக்குச் சென்றாலும் நம்மையும், நம்முடைய வேலையையும் பிரித்துப் புரிந்து கொண்டு அதில் நம்முடைய மனோரீதியான வெளிப்பாடுகளைத் தூண்டுகோலாக எடுத்துக் கொண்டு புறச் செயல் ரீதியான செயல்பாடு எப்படி இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டு செயல்படும் போது நமது சக்தி தேவையற்ற பகுதியில் குறைந்தும் தேவையான பகுதியில் அதிகப்படுத்தியும் செயல்படும் போது நமது செயல் சிறப்பாக இருக்கும்.

பொதுவாக நாம் சந்திக்கும் குடும்பப் பிரச்சினை, தொழில் பிரச்சினை என எந்தப் பிரச்சினையாக இருந்தாலும் மேற்சொன்ன அதே அணுகுமுறையை அணுகி, எங்கு செயல்பட வேண்டும், எங்கு செயல்படத் தேவையில்லை என்பதைப் புரிந்து செயல்பட்டாலே போதும் செயலில் ஓர் நிதானமும், நிறைவும் இருக்கும்.

**"மனதைக் கொண்டு மனதைச் சரி செய்வதை விட்டுவிட்டு, மனதைக் கொண்டு புறக் காரியங்களை செய்வதே சிறப்பு."**





**K.S. ஜீவமணி**
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி



அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்,

சாதாரண மனிதர்கள் இன்பத்தை மட்டுமே நாடுகிறார்கள். துன்பத்தை விட்டு விலகி ஓட முயற்சிக்கிறார்கள்.

அப்படித் தேடி பெருமுயற்சிக்குப் பிறகு அடைந்த இன்பமும் நீடிப்பதாக இல்லை. ஒரு நிலைக்கு மேல் அதுவே துன்பமாக மாறுகிறது.

உண்மையில் நமது இன்பத்தை நாடும் போக்குதான் துன்பத்திற்கு நம்மை இழுத்துச் செல்கிறது.

மன உணர்வுகளைப் பொறுத்த வரையில் இரண்டுமே நிலையானதல்ல என்பதைப் புரிந்து கொள்வதுதான் ஞானம்.

ஞானத் தெளிவு பெற்றவர்களே துன்பத்திலிருந்து விடுபடுகிறார்கள். அவர்களுக்கு ஏற்படும் துன்பம் நீடிப்பதில்லை. விரைவில் ஓர் அமைதி நிலைக்குத் திரும்பி விடுகிறார்கள். துன்பம் மட்டும் அல்ல இன்பமும் அப்படித்தான். அவர்களுக்கு ஏற்படும் இன்பமும் நீடிப்பதில்லை. விரைவில் அமைதி நிலைக்குத் திரும்பி விடுகிறார்கள். இது சரியான நிலைதானா? உண்மையில் இதுவே சரியான நிலை. உயர்ந்த நிலை.

இன்பம், துன்பம் இரண்டுமே எழுச்சியுற்ற நிலை. எழுச்சி என்றாலே உயர்வதும் பின்பு வீழ்வதும் இயற்கை. இவற்றைத் தம்வசம் கொண்டுவர போராடும் அகப் போராட்டமே சிக்கலாகி மனதிற்குத் துயரத்தையும் வேதனையையும் கொடுக்கிறது.

ஞானத்தெளிவு பெற்றவர்கள் தன்னளவில் போராட்டத்தைக் கைவிடும் போது மனதின் இயற்கையான இயக்க ஓட்டத்தில் எல்லா எழுச்சிகளும் அதன் போக்கில் தோன்றி மறைந்து விடுகின்றன.

இவர்கள் துன்பத்தில் மூழ்குவதுமில்லை
இன்பத்தில் துள்ளுவதில்லை!

இரண்டையும் சமமாக பார்க்கும் தன்மைக்கு வந்து விடுகிறார்கள். இதுவே மிக உயர்ந்த நிலை. இதுவே மிக உன்னதமான இயற்கையான சுக நிலை. முக்தி நிலை.

இந்தத் தெளிவுக்குப் பிறகு அகப்போராட்டமின்றி வாழக் கூடிய புற வாழ்வே ஒரு முழுமையான வாழ்வாக அமையும்.

நம் புற வாழ்வுக்கு ஒரு குறிக்கோள், எதிர்பார்ப்பு, விருப்பங்கள் என எவை வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். அதற்கான திட்டமிடுதலோடு சரியான செயல்புரியும் போது வாழ்வில் உயர்ந்த நிலையை அடையலாம். ஆனால் அகத்தைப் பொருத்த அளவில் அதாவது மன உணர்வுகள், நமக்கு தோன்றும் அனுபவங்கள், எண்ணங்கள் போன்றவை இப்படித்தான் இருக்க வேண்டும், இப்படி இருக்க கூடாது என்ற எந்தக் கட்டுப்பாடும், குறிக்கோளும், எதிர்பார்ப்பும் இருக்க கூடாது.

முழுச் சுதந்திரத்துடன் இயற்கையாகச் செயல்பட அனுமதி கொடுத்து விட வேண்டும். அதற்கான புரிதலைக் கொடுப்பதே ஞானம்.

நமது ஞான முகாம்களில் கலந்து கொண்டு தெளிவு பெற்றவர்கள் பலர் இருக்கிறார்கள். வருகின்ற மார்ச் மற்றும் ஏப்ரல் மாதங்களில் மூன்று ஞான முகாம்கள் நடைபெற உள்ளன.

ஞான முகாம்களில் நாம் கலந்து கொண்டு பயன் பெறுவதோடு மற்றவர்களையும் கலந்து கொள்ளச் செய்து அவர்களும் பயன்பெறச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.



Intensive Program at BANGALORE on

# Enlightenment

## In English For Two Days

By Living Master: **Sri Bagavath**

Date : **March 11 & 12, 2017, 10:00 AM to 1:30 PM**
Vanue : **SRI MAHAN ODUKATHUR MUTT,** Ulsoor.

**Admission Free | Limited Seats Only | Prior Registration Required**
**Books are Available.**

**For Registration Please Contact : 94490 35454 | 96635 48010 | 98867 47564 | 98869 26464**

# ஸ்ரீ பகவத் பவன்

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் வணக்கம்,

நம் அனைவரின் இல்லமான ஸ்ரீ பகவத் மிஷனின் திறப்பு விழா நடைபெற்று ஓர் ஆண்டு நிறைவு பெற்று இருக்கிறது. டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற ஞான முகாமைத் தொடர்ந்து பகவத் ஐயா அவர்கள் பகவத் பவன் இல்லத்தில் தங்கி வருகிறார்கள். ஐயாவைச் சந்திக்க பலரும் வந்த வண்ணம் உள்ளனர். திருவண்ணாமலைக்கு வரும் வெளிநாட்டவர்களும் இங்கு வந்து ஐயாவைச் சந்தித்து உரையாடி தெளிவுபெற்றுப் செல்கின்றனர். அவ்வப்போது வெளியூர்களில் நடைபெறும் ஐயாவின் நிகழ்ச்சிகள் தவிர மற்ற நாட்களில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் பவனிலேயே தங்கியிருப்பார்கள். அது சமயம் விருப்பமுள்ளவர்கள் ஐயாவை வந்து சந்தித்து உரையாடிச் செல்லலாம். இங்கு வந்து செல்பவர்களுக்கான உணவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

மேலும் ஸ்ரீ பகவத் பவனின் வளர்ச்சி பணிக்காக இன்னும் 66 நிறுவனர்கள் தேவைப்படும் நிலையில் ரூபாய் 25000/- நன்கொடையாக வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனராக இணைத்துக் கொண்ட திரு .**இரமணி ஸ்ரீனிவாசன்** ஓசூர், அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் இதுவரை நிறுவனர்களாக இணையாதவர்கள் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாக இணைந்து ஞானத் தெளிவை அனைவருக்கும் எடுத்துச் செல்லும் ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

# சென்னையில் 2 நாள் ஞான முகாம்

வழங்குபவர் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்,

நாள் : 4 & 5 மார்ச் 2017 (சனி, ஞாயிறு)
நேரம் : காலை 9:30 மணி முதல் மதியம் 1:00 மணி வரை
இடம் : **சாஸ்திரி ஹால்,** நல்லி எதிர்புறம், மைலாப்பூர், சென்னை.

**பொருள் :**

**1. ஞானப் புரிதல் | 2. அகம் - புறம் | 3. நான் யார்?**
**4.மனோலயம் - மனோநாசம் | 5. புரிதலை உறுதிப்படுத்துதல்**

முன்பதிவிற்கு
ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை.
திரு. **இரவிச்சந்திரன்** : 94444 02986
திரு. **பாலசுந்தரம்** : 99405 34355
திருமதி. **முத்துலட்சுமி** : 95512 53636

செலவு பகிர்வு ரூ.500/- நபர் ஒருவருக்கு

ஸ்ரீ பகவத் ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக!!


ஸ்ரீ பகவத் பவனில் ஐயா அவர்களுடன் வெளிநாட்டவர்கள்


சத்சங்கத்தின் போது


20-01-2017 அன்று பகவத் பவன் இரண்டாம் ஆண்டு துவக்கத்தில்


சத்சங்கத்தின் போது


மாலை நேர மலையேற்றத்தில் வெளிநாட்டவர்கள்


மாலை நேர மலையேற்றத்தில் வெளிநாட்டவர்கள்

# பாதையில் மலர்ந்த மலர்கள்

## நல்வழிக் காட்டிய இறைசக்தி

ஒரு சராசரி பெண்ணுக்கு இருக்கும் ஆசை, கோபம், பொறாமை, வெறுப்பு, நம்மைச் சுற்றி உள்ளவர்கள் நம் பேச்சை கேட்க வேண்டும் என்ற எண்ணம், சிலரிடம் அளவுக்கதிகமாக அன்பு வைத்திருக்கிறேன் என்ற பேரில் அவர்களுக்குத் தொந்தரவாக இருப்பது, எதையும் வெளிப்படையாகப் பேசுபவள் என்ற பெயரில் மற்றவர்கள் மனதைப் புண்படுத்துவது, எதையும் முழுமையாக யோசிக்காமல் முடிவெடுப்பது போன்ற பல விதமான குணங்களில் வாழும் சாதாரணப் பெண் நான்.

என்னுடைய குறைகளை அதைக் குறையாகக் கருதாமல் அதை நியாயப்படுத்துவதும் உண்டு. என்னைச் சுற்றி இருப்பவர்கள் மேல் குறைகளைக் கண்டுபிடித்து அதை முன்னிறுத்தும் போது முதலில் அமைதி இழப்பது நான் தான். என்னுடைய தவறுகள் எனக்கே தெரிந்தாலும் அதை மாற்றிக் கொள்ள முயற்சி செய்கிறேன் பேர்வழி என்று மனதோடு போராடியது தான் மிச்சம்.

இனி கோபப் படக்கூடாது, யாருடைய மனதும் புண்படும்படியாக பேசக் கூடாது என்று இரண்டு நாள் இருந்தால் 3வது நாள் ஒட்டுமொத்தமாக சேர்ந்து பயங்கரமாக வெளிப்படும். என்னுடைய இந்த லட்சணத்தில் மற்றவர்களுக்கு அறிவுரை வேறு. புத்தகங்கள் படிக்கும் பழக்கமும் நேரமும் உள்ளதால் லைப்ரரியில் புத்தகம் எடுத்துப் படிப்பேன். அப்படி ஒரு நாள் ஏதாவது புத்தகம் இருந்தால் எடுத்து வரலாம் என்று லைப்ரரிக்குச் சென்றிருந்தேன். அப்போது தான் அய்யாவின் புத்தகமான **“தியானத்தை விடு, ஞானத்தைப் பெறு”** என்ற புத்தகம் கண்ணில் பட்டது. தலைப்பை வாசிக்கும் போதே அது என்னை ஈர்த்தது. அவ்வளவு தான்.

அய்யாவின் பாதைக்குள் வந்தாச்சு. வாழ்க்கை முழுமை அடைந்தது போல் நிறைவு ஏற்படுகிறது. மனதைப் பற்றிய புரிதல் ஏற்பட்டவுடன் மேலே கூறிய எல்லாக் குணங்களும் இப்போதும் என் மனதில் எழுகின்றன. ஆனால் அதன் பின்னால் செல்வது குறைந்திருக்கிறது, சென்றாலும் சில நிமிடங்களில் நாம் அதன் பின்னால் செல்கிறோம் என்ற விழிப்புணர்வு வந்துவிடுகிறது. இந்த மாற்றத்தினால் என்னுடைய அமைதியும், என்னைச் சுற்றியுள்ளவர்களிடம் அமைதியும் பெருகி இருக்கிறது. ஞான முகாமில் கலந்து கொண்ட கடைசி நாளில் அய்யா நீங்களெல்லாம் ஞானிகள் என்று சொல்லும் போது நாம் நிஜமாகவே ஞானம் என்றால் என்ன? என்பதைப் புரிந்து கொண்டோமா என்ற ஐயம் மனதின் ஒரு ஓரத்தில் இருந்தது.

“அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் – அதை
அங்கொரு காட்டிலோ பொந்திடை வைத்தேன்.
வெந்து தணிந்தது காடு – தழல் வீரத்தில்
குஞ்சென்றும் மூப்பென்றும் உண்டோ?” என்று

பாரதி கூறியது போல் அய்யா அன்று விதைத்த ஞானப்பொறி கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து என் அறியாமையைப் பொசுக்கிக் கொண்டு வருவதை உணர்கிறேன். இந்தப் பாதையைக் காண்பித்த அந்த இறை சக்திக்கும், தான் மட்டும் தெளிவடையாமல் உலக மக்களும் தெளிவடைய வேண்டும் என்ற பெருங்கருணையால் நமக்கெல்லாம் இந்தப் பாதையைக் கற்பித்த நம்முடைய குருவான பகவத் அய்யாவிற்கும் கோடான கோடி நன்றிகள்.

“இறைவன் வேறு குரு வேறு அல்ல. இறைவனுக்கென்று தனியாக உருவம் இல்லை. அவன் மனுஷ்ய ரூபத்தில் வந்து தான் நமக்கு வழிகாட்டுவான்,” என்று சொல்வார்கள். அதே போல் அய்யா நமக்கு வழிகாட்டிக் கொண்டு இருக்கிறார்கள். மகான்களை அவர்கள் வாழும் காலத்தில் அவர்களையும் அவர்கள் கருத்துக்களையும் யாரும் ஏற்கமாட்டார்கள் என்றும், அவர்களைப் புரிந்து கொள்பவர்கள் வெகு சில பேர்தான் இருப்பார்கள் என்றும் கூறுவார்கள்.

இந்தக் கூற்றைப் பொய்ப்பிக்கும் வகையில் அய்யாவின் பாதை உலக மக்கள் அனைவருக்கும் சென்று கொண்டிருக்கிறது, அனைவரும் அகத்தில் ஞானிகளாகவும் புறத்தில் செயல் வீரர்களாகவும் வாழ வேண்டும் என விரும்பி இதற்கான பணியில் ஈடுபட்டிருக்கும் ஸ்ரீ பகவத் மிஷனுக்கு என்னுடைய வாழ்த்துகளும், நன்றிகளும்...

இப்படிக்கு,
**தீபா,** ராஜபாளையம்.
7397596476



# ஜென் கதை

## மடாலயத்தின் சிறந்த பானம்

அது ஒரு ஜென்குரு மடாலயம்.

அந்த மடாலயத்தில் சீடர்களாகச் சேருவதற்காகப் புதிதாக சிலர் வந்திருந்தனர். வந்திருந்தவர்கள் “குருவே நாங்கள் இன்பமாக வாழ விரும்புகிறோம். துன்பங்களைக் களைந்து இன்பமாக வாழ்வது எப்படி?” எனக் கேள்வி கேட்டனர்.

அவர்களை வரவேற்ற ஜென் குரு, “நீங்கள் இன்றுதான் புதியதாகச் சேர்ந்துள்ளீர்கள். உங்கள் கேள்விக்கான பதில் சில நாட்களில் கிடைக்கும். இப்போது உங்களுக்குக் குடிக்க ஏதாவது தருகிறேன்...

“உங்களுக்குக் குடிக்க என்ன பானம் வேண்டும்? இந்த மடாலயத்தின் சிறந்த பானத்தைத் தரவா, அல்லது உங்களுக்குப் பிடித்த சாதாரண பழச்சாறுகளைத் தரவா?” என்று கேட்டார்.

“மடாலயத்தின் சிறந்த பானத்தையே கொடுங்கள்” என்று சீடர்கள் கேட்டார்கள்.

விசேடமான பானத்தை எதிர்பார்த்த அவர்களுக்குச் சாதாரணக் குடி தண்ணீர் மட்டும் வழங்கப்பட்டது.

மறுநாள் காலையிலும் அந்த ஜென் குரு அதே கேள்வியை அவர்களிடம் கேட்டார்.

சுதாரித்துக் கொண்ட சீடர்கள் இன்று தங்களுக்குப் பிடித்த பழச்சாறுகளைக் கேட்டனர்.

அவர்கள் கேட்டுக் கொண்ட பழச்சாறுகள் மட்டும் அவர்களுக்கு வழங்கப்பட்டன.

சீடர்களும் மகிழ்வடைந்தனர்.

அது முதல் அவர்களுக்கு எப்போதெல்லாம் தேவையோ, அப்போதெல்லாம் அவர்களுக்குப் பிடித்த பழரசம் வழங்கப்பட்டு வந்தது.

ஆனால் அவர்களுடைய ஒரே பிரச்சினை என்னவென்றால் அவர்களுக்குக் குடி தண்ணீர் வழங்குவது முற்றிலுமாக நிறுத்தப்பட்டு விட்டது. எவ்வளவு தாகம் எடுத்தாலும் சரி, பழரசம் மட்டுமே வழங்கப்பட்டு வந்தது. தண்ணீர் குடிக்காமல் திண்டாடிப் போய் விட்டார்கள்.

மறுநாள் ஜென்குரு மீண்டும் கேட்டார்.

“உங்களுக்குக் குடிக்க என்ன பானம் வேண்டும்? மடாலயத்தின் சிறந்த பானத்தைத் தரவா, அல்லது சாதாரண பழச்சாறுகளைத் தரவா?”

சீடர்கள் அனைவரும் ஒருமித்த குரலில் கூறினார்கள்:

“குருவே எங்களுக்கு மடாலயத்தின் பானம் மட்டுமே போதும். எங்களுக்குப் பிடித்த பழச்சாறுகளெல்லாம் எங்களுக்கு வேண்டவே வேண்டாம்.”

ஆரோக்கியத்தின் சுகநிலை என்பது இன்பங்களும் அல்ல; துன்பங்களும் அல்ல;

மன ஆரோக்கியத்தின் நிம்மதி என்பது இன்பங்களும் அல்ல; துன்பங்களும் அல்ல;

அது விசேடமான சுவையுள்ள பழச்சாறுகள் அல்ல. ஆனால் அது தான் அனைவருக்கும் தேவையான இயற்கையான குடிநீர்.

அந்த இயற்கைக் குடிநீரை – சுகநிலையை – நிம்மதியை நமக்குள் எவ்வாறு தான் கொண்டு வருவது?

மனதிற்குள் இந்த நிலையை கொண்டுவர நாம் எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை. ஏனெனில் மனத்தின் இயற்கையான நிலையே இந்த நிலைதான்.



Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555